உ

ஸ்ரீகுருப்யோ நம :

# ஸ்ரீ ஆதிசங்கரர்



S. V. ராதாகிருஷ்ண சாஸ்திரிகள்
ஸ்ரீரங்கம்

வெளியிட்டோர் :
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
ஸ்ரீ சங்கரா மெஷின்
நெ. 20, அலர்மேலுமங்காபுரம்,
மைலாப்பூர், சென்னை-4.

# ஸ்ரீ ஆதிசங்கரர்

*ச்ருதிஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம்*
*நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்.*

சங்கரர்—மங்களத்தைச் செய்பவர், மங்களத்தை வழங்குபவர். அவரே சம்பு—மங்களத்தின் தோற்றுவாயும் கூட. அந்த பரமேச்வரரிடமிருந்து மங்களத்தைப் பெறுகிறோம்.

அவர் குருவானவருக்கெல்லாம் குரு. பேரறிவும், எல்லையற்ற சாந்தியுமே உருவானவர். அதிர்வுறாத பெரு மோனநிலை கொண்டு கல்லால மரத்தினடியில் தக்ஷிணாமூர்த்தியாக சின்முத்திரை காட்டி பேரானந்தமான பரதத்துவ நிலையை ஸனகாதியருக்குக் காட்டியவர்.

உலகில் மக்கள் ஆழ்ந்த அறியாமையில் சிக்குண்டு விடுபட வழி தெரியாமல் துன்புற்றபோது, சங்கரரது அந்த மோனநிலை கலைந்தது. ஆலமரத்தடிவாஸத்தைத் துறந்த அவர் உலகத்தின் ஆசானாக, பாரதத்தின் தென்கோடியில் பிறந்து, தன்னைச் சுற்றியிருந்த பந்தத்தைத் துறந்து, பாரதம் முழுவதும் காலாற நடந்து, வழியில் ஆட்கொண்டு ஆத்ம தத்வ உபதேசம் செய்து வழிகாட்டினார். அதற்கென அவர் எடுத்த வடிவம் ஸ்ரீ சங்கர பகவத்பாதர். ஆதி சங்கரர், சங்கராசாரியர், சங்கரகுரு, சங்கர தேசிகர் என்றெல்லாம் அறிமுகப்படுத்தப்பட்டவர்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, ஒரு நந்தன ஆண்டு வைசாக சுக்ல பஞ்சமியில் நடுப்பகலில் சிவகுரு ஆர்யாம்பிகை தம்பதியின் புதல்வனாக கைலாயத்துச் சங்கரர் காலடி சங்கரராக அவதரித்தார் என்று ஆன்றோர் கூறுவர்.

கேரளத்தில் சூர்ணா என்ற ஆலவாய்ப் புழையின் கரையில் காலடி என்ற கிராமத்தில் வாழ்ந்த வித்தியாதிராஜர் என்ற பேரறிவாளரின் குமாரர் சிவகுரு. மகபண்டிதர் என்ற பேரறிவாளரின் குமாரி ஆர்யாம்பிகை. இருவரும் மணந்து பல்லாண்டுகள் ஆகியும் புத்திரப்பேறில்லாமையால் வருந்தினர். இருவரும் அருகிலுள்ள திருச்சிவப்பேரூரில் கோயில் கொண்டுள்ள விடக்குன்று நாதர்,

என்ற வ்ருஷாசலேச்வரரை நோன்பிருந்து வழிபட்டனர். ஈசன் அவர்களிடம் கருணை கொண்டு கனவில் தோன்றினார். ''நீண்ட ஆயுள் கொண்ட மூடன் வேண்டுமா? அற்பாயுள்பெற்ற பேரறிவாளன் வேண்டுமா?'' எனக் கேட்டார். அறிவாளியான புதல்வனையே அருள்வாய் என இருவரும் வேண்டினர். அங்கு முறைப்படி நோன்பு இருந்து வழிபாட்டை முடித்து, இருவரும் காலடி வந்தனர்.

ஆர்யாம்பிகை கருத்தரித்தாள். எப்போதும் தூய ஸ்படிக நிறம் கொண்டவரும், முக்கண்ணரும், பிறைசூடியுமான தக்ஷிணாமூர்த்தி வாலிபம் குன்றாத தோற்றத்தில் செஞ்சடையுடன் ஆலடியில் அமர்ந்திருப்பவராக நினைவிலும் கனவிலும் அவர்கள் மனத்தில் நிறைந்திருந்தார்.

இருவரும் எதிர்பார்த்த அந்த நன்னாள் வந்தது. ஆர்யாம்பிகை சுகமாக ஆண்மகனைப் பெற்றெடுத்தாள். சிசுவும் சிவபெருமானது அடையாளங்களுடன் காணப்பட்டது. உரிய வேளையில் ஜாதகர்மமும், சங்கரன் என நாமாகரணமும் செய்யப்பட்டது.

சிசு தாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. தந்தை மூன்றாவது வயதில் சௌளம் செய்வித்து அக்ஷராப்பியாஸம் செய்வித்தார். குருவின் உபதேசத்தைப் பெயரளவில் பெற்றதும் அனைத்து வித்யைகளும் ஞானபாலனிடம் புகுந்து கொண்டன.

ஐந்தாவது வயதில் உபனயனம் நடந்தேறியது. சிவகுருவின் வாழ்நாள் முடிவுற்றது. தாய் சங்கரரை குருகுலம் அனுப்பினாள். பிரும்மசாரி சங்கரர் முறைப்படி பிக்ஷை எடுத்து உணவை உண்டே கல்வி கற்றார். ஒருநாள் ஓர் ஏழை வீட்டின் வாசலில் நின்று, ''தாயே! பிக்ஷை தாருங்கள்,'' எனச் சங்கரர் வேண்டினார். அன்றாடம் கிடைக்கின்றதைக் கொண்டு வாழ்கின்ற குடும்பம் அது. கணவர் வெளியேசென்றவர் வீடு திரும்பவில்லை. வீட்டில் உணவோ உணவுப்பண்டமோ, எதுவுமில்லை. வீட்டிலிருந்த பெண்மணிக்கு அந்த அபூர்வ பாலகனுக்கு எதையாவது பிக்ஷயாக அளிக்க வேண்டும் என்று ஆவல். பெரும் துயருடன் தேடிக்கிடைத்த நெல்லிக்கனியைக் கூனிக் குறுகி, பாலனின் பிக்ஷா பாத்திரத்தில் இட்டாள்.

பாலகனின் உள்ளம் கனிந்தது. செல்வத்திற்கும் நிறைவிற்கும் தேவியான மஹாலக்ஷ்மியை மனமுருகி வேண்டினார். தேவி திருவுள்ளம் கொண்டு நேரில் தோன்றினாள். சங்கரர் தேவியைத் துதித்தார். ''இப்பிறவியில் செல்வம் பெறுவதற்கான புண்யம் எதனையும் இந்த தம்பதி செய்தாரில்லையே,'' எனத் தேவி தயங்கினாள். தன்

முழுச் சொத்தாக இருந்த நெல்லிக்கனியை வேதமோதுகின்ற பிரும்மசாரிக்கு, நிறையக் கொடுக்க இல்லாமைக்கு நொந்து, மன முவந்து அளித்ததே குபேரச்செல்வம் தரக்கூடிய புண்யமாயிற்றே!'' எனச் சங்கரர் வேண்டினார். தேவி மகிழ்ந்து தங்க நெல்லிக்கனி களால் அந்த வீட்டை நிரப்பினாள். கனகதாரா ஸ்தோத்திரம் என்ற புகழ்பெற்ற துதி சங்கரர் லக்ஷ்மி தேவியைக் குறித்து இத் தருணத்தில் பாடியதே.

சங்கரர் எட்டு வயதிற்குள் வேதங்கள் ஓதி அவற்றின் பொருளு ணர்ந்து,குருவின் நல்லாசி பெற்று தாயிடம் வந்து அவளுக்குப் பணி விடை செய்தார். தாய் முதுமையால் நீராடப் புழைக்குச் செல்லக் கூட இயலாதவளானாள். சூர்ணா நதியை வழிபட்டு அதனைத் தன் வீட்டின் அருகிலேயே ஓடச் செய்தார்.

ஒரு நாள் தாயுடன் நதியில் நீராடச் சென்ற பாலகனது காலை முதலை கவ்வியது. பாலகன் கதறினான். தாய் இதனை உணர்ந்து துடித்தாள். அற்பாயுளுள்ள அறிவாளியான பிள்ளையை ஈசனிடம் வேண்டியது நினைவில் வந்தது. முதலை வாயில் அகப்பட்டு மரண மடைவது துர்ம்ரணமாகும். ''நான் துறவறம் பூண்டு விடுகிறேன். துறவறம் என்பது மறுபிறப்பே. அதனால் இந்தப் பிறவியில் முதலை வாயில் மரணம் என்ற பிராரப்தவினை துறவறம் பூண்டதும் அகன்று விடலாம். துறவறம் கொள்ள அனுமதி தாருங்கள்,'' எனச் சங்கரர் தாயை வேண்டினார். வேறுவழி காணாத தாய் துறவறத்திற்குச் சம்மதித்தாள். சங்கரர் உடன் முறைப்படி மந்திரங்கள் ஓதிப் பற்று களை விலக்கி எல்லா உயிரினங்களுக்கும் அபய உறுதி அளித்துத் துறவறம் ஏற்றார். முதலையும் பிடியைத் தளர்த்தி அகன்று விட்டது.

கரையேறிய தனயனை நடந்ததையெல்லாம் மறந்த தாய் தன்னுடன் வரும்படி அழைத்தாள். ''தாயே நான் துறவி. இந்த பரந்த உலகமே எனக்கு இனி வீடு. உறவினர் உங்களைக் காப்பாற் றுவர். நல்ல குருவை நாடிச் செல்கிறேன். அனுமதி தாருங்கள்,'' என்று தாயை வேண்டினார்.

''தனக்கு இறுதிநேரும் போது நற்கதி பெறும்படி ஈமக் கடன் களைச் செய்வதற்காகவே நல்ல புத்திரர்களைப் பெறுகின்றனர். உன்னைப் பெற்ற எனக்கு அதனை யார் செய்வர்? அதனை நீயே செய்ய வேண்டும்'', என்று தாய் வற்புறுத்தினார். ''இறுதி நேரத் தில்என்னை நினைத்தால் நான் எங்கிருந்தாலும் வந்து அதனை நடத்திக் கொடுக்கிறேன்'', என உறுதி கூறித் தாயின் அனும

பெற்று, நல்லுபதேசம்பெற நற்குருவை நாடிச் சங்கரர் அங்கிருந்து புறப்பட்டார்.

* நதிகளும் நகரங்களும் கிராமங்களும் கடந்து செல்கின்ற சங்கரரின் கண்களுக்கு உலகமே ப்ரம்பொருளின் மாயப் படைப்பாகப் பட்டது. நர்மதையின் கரையில் ஒரு குகையினுள் உள்ள ஒரு யோகியே தமது குரு என நினைத்து ஓங்காரேசுவரம் வந்து குருநாதரைக் கண்டார்.*

அத்வைத வித்யைக்கு முதலாவது ஆசாரியர் பகவான் நாராயணன். அவரிடம் தொடங்கிய குருபரம்பரை பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர் வரை பிதா புத்திரர் என்ற முறையில் வந்து, பின் குரு-சிஷ்யர் என்ற முறையில் கௌடபாதர், கோவிந்த பகவத்பாதர், சங்கரர் என்றவாறு தொடர்ந்தது. சங்கரர் தன் குரு கோவிந்த பகவத்பாதரை நர்மதைக் கரையில் உள்ள குகையில் கண்டார்.

சிதம்பரத்தில் பதஞ்சலியிடம் வியாகரணம் கற்கக் கௌட தேசத்திலிருந்து ஒரு மாணவன் வந்தான். பாடம் நடந்தபோது ஏற்பட்ட முறை கேட்டால் பாடம் நின்றது. குரு சாபத்தால் கௌடர் பிரும்மராக்ஷஸன் ஆனார். குருவான பதஞ்சலிக்குக் கருணை பிறந்தது. உடன் தான் உபதேசிக்கவிருந்த வியாகரண மனைத்தும் தானே கௌடரது அறிவில் பதியுமாறு அருளினார். தக்க சிஷ்யருக்கு இதனைப் போதித்ததும் சாபம் நீங்கும் என்றும் அருளினார். பாரததேசத்தின் நடுப்பகுதியில் ஒரு காட்டில் மரத்தில் நல்ல சிஷ்யனை நாடி வசித்த கௌடரிடம் சந்திரசர்மா சீடராகச் சேர்ந்தார். வியாகரணம் கற்றார். கௌடரது சாபம் நீங்கியது. பதரிகாசிரமத்தில் வியாஸ குகையிலிருந்த சுகரிடம் ஆத்மதத்துவ உபதேசம் பெற்றார்.

சந்திரசர்மாவும் பலருக்கு வியாகரணம் கற்பித்தார். தன் குருவான் கௌடபாதரைத் தேடி பதரிகாசிரமம் வந்து அவரிடம் ஆத்மதத்துவ உபதேசம் பெற்றார். எப்போதும் கோவிந்த, கோவிந்த என்றே கூறிவந்தார். கோவிந்த பகவத்பாதர் என்று ஆன்றோர் இவரை அழைத்தனர்.

---

*நர்மதை நதிக்கரையிலுள்ள குரு கோவிந்த பகவத் பாதரின் குகையைக் கண்டு அங்கு மண்டபம் அமைத்து தினந்தோறும் வழிபட ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

தன் குருவின் பரம குருவான வியாஸர் எழுதிய பிரும்மஸூத்திரத்தை எளிதில் புரிந்து கொள்ள ஒரு விரிவுரை காணக் கோவிந்தர் விரும்பினார். "கைலாஸத்து சங்கரனே காலடி சங்கரனாகத் தோன்றி உன்னைக் குருவாக நாடி வருவார். உன் விருப்பம் நிறைவேறும். நர்மதையைக் கமண்டலுவில் அடக்கியபின் உன்னிடம் வருபவரே சங்கரர்", என்று வியாஸர் அருளினார். அந்த சங்கரரை எதிர்பார்த்து கோவிந்தரும் நர்மதைக்கரை குகையில் தவமிருந்தார்.

சங்கரர் நர்மதைக் கரையில் உள்ள குருவைக் காண்கின்ற ஆர்வத்துடன் வந்தபோது, நர்மதையில் வெள்ளம் பெருகிக் குகையை மூழ்கடிக்கின்ற அளவிற்குப் பெருகிற்று. சங்கரர் நர்மதா தேவியைத் துதித்து வேகம் தணியக் கோரினார். சங்கரரின் கமண்டலுவில் நர்மதையின் வெள்ளம் புகுந்தடங்கியது.

சங்கரர் குகையின் எதிரில் நின்று தன்னை சிஷ்யனாக ஏற்கும் படி கோவிந்தரை வேண்டினார். குருவின் தவம் கலைந்தது. குகையின் வெளியே வந்த குரு வியாஸர் அருளியபடி சங்கரரே வந்து நிற்பதை உணர்ந்து மனமகிழ்ந்து; அவரை சிஷ்யராக ஏற்று உபநிடத மஹாவாக்கியங்களை உபதேசமளித்து துறவை நிறைவுறச் செய்தார்.

தொடர்ந்து வந்த சாதுர்மாஸ்ய காலத்திற்குள் வியாஸரது பிரும்மஸூத்திரம், உபநிஷதங்கள முதலானவற்றைத் தன் குரு கௌடபாதர் தமக்கு உபதேசித்தபடி, கோவிந்தர் சங்கரருக்கு உபதேசித்து விளக்கம் தந்தார். சங்கரர் ஆத்மவித்யைப் பூர்ணமாகக் கற்று மனத்தாலும் தியானத்தாலும் அதனைப் பூர்ணமாக உணர்ந்து பிரும்ம நிஷ்டரானார்.

கோவிந்த பகவத்பாதர் சங்கரரது அனுபூதி நிலையை உணர்ந்து காசிக்குச் சென்று விசுவநாதப் பெருமாளின் அருள் பெற்று வியாஸரின் பிரும்மஸூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதுமாறு பணித்து வாழ்த்திக் காசிக்கு அனுப்பினார்.

காசிக்குச் சென்ற சங்கரர் விசுவநாதரை வழிபட்டுக் கங்கா தீரத்தில் அமர்ந்து பிரும்மஸூத்ர பாஷ்யம் எழுதினார். சோழ தேசத்திலிருந்து வந்த ஸனந்தனர் என்ற பிரும்மசாரி சங்கரரை அணுகித் தன்னைச் சீடராக்கிக் கொள்ளக் கோரினார். சங்கரர் அவரைச் சீடராக ஏற்றார்.

கங்கையில் நீராடித் தம் இருப்பிடம் வந்து கொண்டிருந்த சங்கரரை விசுவநாதர் சண்டாள வேஷத்தில் வழிமறித்தார்,

வழிவிட்டு அகலும்படி கோரிய சங்கரரை, ''அந்த உடலாகிய உன்னைவிட்டு இந்த உட லாகிய என்னை விலகச் சொல்கிறாயா? அல்லது உள்ளே பேரறிவாகி நிற்கும் ஆத்மாவாகிய உன்னை விட்டு, பேரறிவாகிய ஆத்மாவான என்னை விலகச் சொல் கிறாயா?'' என்று, விசுவநாதர் கேட்டார். ''எங்கும் ஊடுருவி நிற்கின்ற பேரறிவான ஆத்மாதான் நான் என்று உணர்ந்தவனே சண்டாளனாயினும் எனக்கு குரு,'' என்று கூறி, சங்கரர் அவரை வணங்கினார். விசுவநாதரின் அருள் பெற்றார்.

ஒருநாள் ஸநந்தனர் கங்கையின் ஒரு கரையில் குருவை எதிர் பார்த்து நின்றிருந்தார். அவரது கைகளில் குருவின் ஆடை இருந் தது. சங்கரர் நீராடிவிட்டு மற்றொரு கரையில் ஏறி ஸநந்தனரை ஆடையைக் கொணரும்படி கூறினார். நடுவில் கங்கை ஓடுவதையே உணராத ஸநந்தனர் அக்கரைக்கு நடந்து சென்றார். இவர் கால் வைத்த இடங்களில் கங்காதேவி தாமரைகளைத் தோற்றுவித்துத் தாங்கினாள். அதனைக் கண்ட மக்கள் பத்மபாதரென அவரைப் புகழ்ந்தனர்.

தனது ஸூத்திரங்களுக்குப் பாஷ்யம் எழுதிய சங்கரரின் பேர றிவை உலகிற்கு விளக்க, சிரஞ்சீவியான வியாஸரே முதியவராகச் சங்கரர் முன் தோன்றித் தனது சில ஸூத்திரங்களுக்கான விளக் கத்தைப் கேட்டார். சங்கரர் அளித்த விளக்கத்தால் மனநிறைவு பெற்று அவருக்குத் தனது சுயரூபம் காட்டி, சங்கரரைத் தனது நூல் களை நாடு முழுவதிலுமுள்ள தக்க சிஷ்யர்களுக்கு உபதேசிக்கும்படி பணித்தார்.

விருஷாசலேசரின் அருளால் பெற்ற ஆயுள் எட்டாம் வயதில் முடிந்தது. துறவறம் பூண்டதால் அது பதினாறு ஆண்டுகளுக்கு நீண்டது. அதன் இறுதி நெருங்கியுள்ளதை வியாசரிடம் சங்கரர் தெரிவித்துச் சிஷ்யர்களுக்குப் போதிக்க இயலாதிருப்பதை விளக்கி னார். வியாசர் ''மற்றுமொரு பதினாறு ஆண்டுகள் உனது ஆயுள் நீடிக்கும். அதனால் ஆத்மவித்யையைப் பரப்புவாயாக'' என்று அருளினார்.

சங்கரருக்குப் பலர் சிஷ்யராயினர். அவர்களுடன் பதரிகாசிரமம் சென்றார். அங்கு தன் குருவிற்கு குளிரால் பாதை ஏற்படுவதைத் தடுக்க யோக சக்தியால் வெந்நீர் ஊற்று (தப்த குண்டம்) அமைத் தார். பௌத்தர்களால் அலகநந்தையில் எறியப் பெற்ற பதரீ நாராயணஸாலக் கிராமத்தை அதிலிருந்து தேடி எடுத்துப் பிரதிஷ் டைச் செய்து கேரளத்தைச் சார்ந்த தன் சிஷ்யரான அக்னி சர்மாவைப் பூஜை செய்ய நியமித்தார்.

தாய் ஆர்யாம்பிகை தன் இறுதிகாலம் நெருங்கியதும் சங்கரரை நினைத்தார். சங்கரர் உடன் யோக சக்தியால் காலடி சென்று தாயின் இறுதிகால நினைவு இறைவனிடம் நிலைக்கும்படி செய்தார். ஸ்ரீஹரியின் நினைவுடன் அவள் இவ்வுலக வாழ்க்கையை நீத்ததும், அவளது ஈமச் சடங்குகளைச் செய்து ஓங்காரேச்வசம் வந்து தன் குரு கோவிந்த பகவத்பாதருக்கு அவர் ஸமாதியடையும் வரை பணிவிடை செய்தார்.

பிரயாகையில் குமாரில பட்டர் என்ற மகான் பௌத்தர்கள் வேதநெறியை அழிக்க முற்பட்டதைத் தடுத்து நிறுத்தினார். பௌத்தர்களின் கொள்கைகளை நேரிடையாக அறிந்துகொள்வதற்காகப் பௌத்தவேஷம் பூண்டு பௌத்த குருகுலத்தில் வசித்தார். இதனைக் கண்டறிந்த பௌத்தர்கள் இவரை பௌத்த விஹாரத்தின் மேல்தளத்திலிருந்து தள்ளிக் கொல்ல முற்பட்டனர். வேதத்திலிருந்த அவரது நம்பிக்கை அவரைக் காப்பாற்றியது. பௌத்தர்களை வாதில் வென்றபின் குருத்துரோகம் செய்துவிட்டேன் என்று எண்ணி, பிராயசித்தமாக உமிக்காந்தலில் தன் உடல் கருகச் செய்தார். சங்கரர் குமாரிலரை அந்த ஸமயத்தில் கண்டார். சங்கரரது அத்வைதக் கொள்கைகளை முன்னரே அறிந்து அதில் நம்பிக்கை கொண்டிருந்த குமரிலர், தான் இறுதியை நெருங்குவதால், தன் சிஷ்யனான விசுவரூபரை வாதில் வென்று ஆத்மவித்யையை அவருக்கு உபதேசிக்கக் கோரினார். சங்கரர் அவருக்கு அருள் பாலித்து மகததேசம் சென்று விசுவரூபரைக் கண்டார்.

விசுவரூபர் சிறந்த மீமாம்ஸா பண்டிதர். அவரது வீட்டிலுள்ள கிளியும் வேதம் ஓதும். அதன் பொருள் கூறும். வாதம் புரியும். ஆயிரக்கணக்கான சீடர்கள் அவருக்கு உண்டு. சங்கரரைக் கண்டதும் விசுவரூபம் தன் வீட்டில் பிக்ஷை ஏற்கக் கோரினார். வாதபிக்ஷை தருவதாயின் அன்ன பிக்ஷை ஏற்பேன் என்று சங்கரர் கூறினார். விசுவரூபர் அதனை ஏற்றுப் பிக்ஷையளித்துத் தன் மனைவியான பாரதியை நடுவராக அமைத்துச் சங்கரருடன் வாதிட்டார். வாதில் தோற்றால் சங்கரர் காவியுடை நீக்கி வெள்ளையாடை உடுத்த வேண்டும். விசுவரூபர் தோற்றால் துறவறம் கொள்ள வேண்டும் என்று இருவரும் பந்தயமிட்டனர். வாதத்தில் விசுவரூபர் தோற்றார். சங்கரரது சீடரானார். ஸுரேச்வரர் என்ற பெயர் பெற்றார். நடுவராக இருந்த பாரதி துர்வாஸரது சாபத்தால் மனிதப் பிறவி பெற்ற ஸ்ரஸ்வதி தேவியாவாள். சங்கரரைக் கண்டதும் சாபம் நீங்கியது. தன்னிருப்பிடம் செல்ல விரும்பிய ஸரஸ்வதியைத் தடுத்துச் சங்கரர் தான் விரும்புகின்ற இடங்களில் தங்கி அருள் பாலிக்கும்படி கோரினார்.

யோகசக்தியால் கைலாஸம் சென்று சிவபெருமானின் அருள் பெற்று அவ்விடமிருந்து ஐந்து லிங்கங்களைப் பெற்று வந்தார். பாரத தேசத்திலுள்ள அனைத்து க்ஷேத்திரங்களைத் தரிசிக்க மூன்று தடவை பாரத பூமியை வலம் வந்தார்.

ஸ்ரீ சைலத்தில் ஒரு காபாலிகன் தனித்து யோக நிலையிலிருந்த சங்கரரை அணுகி அவரது தலையைப் பைரவருக்கு பலியாக அளிக்கும்படி கேட்டான். சங்கரர் சம்மதித்தார். ஆனால் காபாலிகன் கழுத்தை வெட்ட முயன்றபோது, பத்மபாதரது உபாஸனா தெய்வமான நரசிம்மர் அவர் உடலில் ஆவேசித்துக் காபாலிகனை அடக்கி சங்கரரை மீட்டார். சங்கரர் தொடர்ந்து யோகம் பயின்று அங்கு சித்தி பெற்றார். கோகர்ணத்தில் இறந்த சிறுவனுக்கு உயிரூட்டினார்.

ஸ்ரீ வலி என்ற ஊரில் ஜடனாக இருந்த ஒரு சிறுவனை அவனது பெற்றோர்கள் சங்கரரிடம் அழைத்துச் சென்றார்கள். அவன் பேசுவதில்லை, யாருடனும் பழகுவதில்லை, உண்பதில்லை, கோபிப்பதில்லை. அடித்தாலும் பொருட்படுத்துவதில்லை. உடலில் வளர்ச்சியும் அமைதியும் மட்டும் குன்றாதிருந்தான். ''சிறுவனே! நீ ஏன் ஜடமாக இருக்கிறாய்? நீ யார்?'', எனச் சங்கரர் வினவினார். ''ஐயா! நான் ஜடனல்ல. நிலைத்த பேரறிவான என் அருகாமையில் இந்த ஜட உடல் இயங்குகிறது'', என்று பதில் அளித்தான்.

மஹாயோகி ஒருவர் குளக்கரைக்கு வந்தார். அங்கு நீராட வந்த ஒரு பெண்மணி தன் குழந்தையை அவர் எதிரில் கிடத்தி அதைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி நீராடச் சென்றாள். குழந்தை தவறி குளத்தில் விழுந்து இறந்தது. யோகிக்கு இவ்வுலக நினைவே இல்லை. நீராடி வந்த பெண்மணி தன் குழந்தை குளத்தில் விழுந்து இறந்திருப்பதைக் கண்டு யோகியை நிந்தித்து அழுதாள். யோகி கருணையுடன் ''தான் தற்போது இருக்கின்ற உடலிலிருப்பதும் குழந்தையின் உடலிலிருப்பதும் ஒன்றே. குழந்தையின் உடலிலிருந்தால் தாய் மகிழ்வாள். தனக்குக் குறை ஏதுமில்லை,'' என எண்ணி குழந்தையின் உடலில் நுழைந்தார். குழந்தை பிழைத்தெழுந்தது. ஆனால் அது உலகத்து குழந்தையாக இல்லை. சங்கரர் இதனை உணர்ந்து உலகை உள்ளங்கை நெல்லிக்கனி போல அறிந்தவரானதால் ஹஸ்தாமலகர் எனப் பெயரிட்டுத் தம்முடன் சேர்த்துக் கொண்டார்.

மேற்குக் கடலோரமாக யாத்திரை செய்த சங்கரர் பகந்தர நோய்வாய்ப்பட்டார். மலதுவாரம் வழியே இரத்தக் கசிவு ஏற்பட்டது. அது திருச்செந்திலாண்டவனின் இலை விபூதியாலும்

அசுவினி தேவர்களின் சிகித்ஸைபாலும் நீங்கியது. கிரி என்ற சிஷ்யர் அப்போது குருவிற்குப் பணிவிடை புரிந்தார். மந்த அறிவு உள்ளவர். ஆனால் குருவின் பணிவிடையில் நிகரற்றவர். மற்ற சிஷ்யர்கள் இவரை மூடன் என்று பரிகசித்தனர். சங்கரர் தன் அருளால் அவரை பெரும் மேதையாக்கினார். குளக்கரையில் குருவின் ஆடையை அலசச் சென்றிருந்த கிரி அங்கிருந்து ஓடோடி வந்து ''குருவே! நீரே சரணம். நீரே கைலாஸத்திலுள்ள சிவபெருமான். உலகின் ஞான குருவாகிய தாங்கள் என்னை ஆத்மதத்துவம் உணர்ந்தவனாகச் செய்ய வேண்டும்,'' என்று தானே வாக்கில் வந்த தோடகம் என்ற விருத்தத்தில் அமைந்த சுலோகங்களால் வேண்டினார். (இந்த தோடகாஷ்டகத்தை இன்றும் சங்கர குரு வணக்கத்தின் போது எல்லோரும் சொல்கிறார்கள்) இவரது மேதையையும் கல்வியறிவையும் உணர்ந்த மற்ற சிஷ்யர்கள் அன்றிலிருந்து இவரைப் பெரிதும் மதிக்கத் தொடங்கினர்.

ஸுரேச்வரரையும், பத்மபாதரையும் தனது பாஷ்யங்களுக்கு உரை எழுதும்படி சங்கரர் பணித்தார். ஸுரேச்வரர் தைத்திரீயம் பிருஹதாரண்யகம் என்ற இரு உபநிஷதங்களுக்குச் சங்கரர் எழுதிய பாஷ்யத்திற்கு உரையாக வார்த்திகம் எழுதினார். பிரும்ம ஸூத்ர பாஷ்யத்திற்குப் பத்மபாதர் உரை எழுதினார். குரு அவர்களைப் பாராட்டினார்.

பத்மபாதர் குருவின் அனுமதியுடன் தீர்த்த யாத்திரை சென்றார். அப்போது தன் தாய்மாமன் வீட்டில் சில நாட்கள் தங்க நேர்ந்தது. அத்வைதத்தை மறுத்து வாதிட்டுக் கொண்டிருந்த அந்த மாமன் பத்மபாதரின் நூலை தீக்கிரை யாக்கியதுடன், மறுபடி நூல் எழுதாதபடி பத்மபாதரின் அறிவை, உணவில் மருந்திட்டு மங்கச்செய்தார். பத்மபாதர் உடன் குருவினிடம் சென்று தன் நிலையை விளக்கி வருந்தினார். பத்மபாதர் தான் எழுதிய நூலின் முதல் ஐந்து பாதங்களை சங்கரரிடம் வாசித்துக் காட்டியிருந்தார். அதனைச் சங்கரர் நினைவு கூர்ந்து நூலாக எழுதச் சொன்னார். அந்தப்பகுதி மட்டும் பஞ்சபாதிகை என்ற பெயரில் தற்போது கிடைக்கின்றது.

சங்கரர் துங்கபத்ரை நதிக்கரையில் சாரதையை பிரதிஷ்டை செய்து பிருந்விதரர் என்ற சிஷ்யரை வழிபட்டுவரும்படி பணித்து விட்டுச் சோள தேசம் சென்றார். ராமேச்வரம், மதுரை சென்று பின் திருவானைக்காவில் ஸ்ரீ அகிலாண்டேசுவரியின் உக்ர தலையை அடக்க ஸ்ரீ சக்ரமாகத் தாடங்கம் செய்து அணிவித்தார்.

ஸ்ரீ சங்கரரது காமகோடி பீடத்தில் வந்த சிஷ்ய பரம்பரையினரே இன்றும் அந்தத் தாடங்கம் நலிவுறும்போது புதுப்பித்து அணிவிக்கின்றனர். ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதரை வழிபட்டு அவரது பிம்பத்தினடியில் ஜனாகர்ஷண யந்திரத்தைப் பதித்தார். திருவிடைமருதூரில் மஹாலிங்க சுவாமியை அங்கிருந்த மக்களுக்கு அத்வைதத்தில் நம்பிக்கை ஏற்பட வழிகாட்டக் கோரினார். உடன் மஹாலிங்கத்திலிருந்து ஒரு கை வெளிப்பட்டது. அசரீறியாக அத்வைதம் ஸத்யம் என்று உரத்த ஒலி கேட்டது. மக்கள் ஆச்சரியத்துடன் சங்கரரை வணங்கினர்.

திருப்பதி சென்று ஸ்ரீ வெங்கடேசரை வழிபட்டு அங்கு தனாகர்ஷண யந்திரத்தைப் பதித்தார். இப்படிப் பல க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்து விட்டு பூமிதேவியின் ஒட்டியாண ஸ்தானமான காஞ்சிக்கு வந்தார். முன்னர் துர்வாஸர் அங்கு பீடத்தின்மேல் காமாக்ஷிதேவியை பிரதிஷ்டை செய்து வழிபட்டுள்ளார். அங்கு சங்கரர் காமாக்ஷியின் எதிரில் ஸ்ரீசக்கிரயந்திரத்தைக் கல்லில் வடித்து வழிபட்டார். ராஜசேகரன் என்ற அரசன்; சங்கரரின் ஆணைப்படி தங்கத்தில் காமாக்ஷியின் பிம்பத்தைச் செய்து தந்தான். (இன்று தஞ்சை மேல வீதியில் அந்த ஸ்வர்ண காமாக்ஷி கோயில் கொண்டுள்ளாள்.) வரதராஜர், ஏகாம்பரநாதர், ஆலயங்களை செப்பனிட்டு, பூஜை முறைகளைச் சீர்செய்தார். காஞ்சீபுரம் பல பேரறிவாளர்கள் கூடுமிடமாயிருந்தது. காமாக்ஷியின் அருகில் ஸர்வஜ்ஞ பீடம் இருந்தது. பாரத தேசத்தில் பல பகுதிகளிலிருந்தும் கூடியுள்ள வித்வான்களை வாதில் வென்றவரே ஸர்வஜ்ஞ பீடம் ஏறி அமரத் தகுதி பெறுவார். அதுவரை அதில் யாரும் ஏறியதில்லை. சங்கரர் எல்லா வித்வான்களையும் வாதில் வென்றார். ஸர்வஜ்ஞ பீடம் ஏறி அமர்ந்தார். எல்லா வித்வான்களும் அவரை ஜகத்குரு எனப்பாராட்டினர்.

ஏழு வயதுள்ள் சிறுவன் ஒருவன் தாமிரபரணி நதிக்கரையிலிருந்து சங்கரருடன் வாதிடுவதற்காகவே வந்தவன். சங்கரரைக் கண்டதும் வணங்கித் தன்னையும் அவரது சிஷ்யராக்கிக் கொள்ள வேண்டினான். சங்கரர் அவனை ஏற்று ஸர்வஜ்ஞாத்மா என்று பெயரிட்டழைத்தார்.

பதரி, புரீ, துவாரகை, சிருங்ககிரி முதலிய பல இடங்களில் மடங்களை நிறுவி அவற்றில் தமது சிஷ்யர்களை ஆசாரியர்களாக அமர்த்தினார். காஞ்சியில் காமகோடி பீடத்தில் ஸுரேச்வரரது மேற்பார்வையில் ஸர்வக்ஞாத்மாவை ஆசார்யராக அமர்த்தினார்.

கைலாஸத்திலிருந்து கொணர்ந்த ஐந்து லிங்கங்களில் முக்தி லிங்கத்தை கேதாரத்திலும், வரலிங்கத்தை நீலகண்டத்திலும், மோக்ஷலிங்கத்தைச் சிதம்பரத்திலும் ப்ரதிஷ்டை செய்தார். போக லிங்கத்தை சிருங்ககிரியில் சாரதா பீடத்தின் வழிபாட்டுத் தெய்வ மாகச் செய்தார். தான் ஆராதித்து வந்த யோகலிங்கத்தை ஸர்வஜ்ஞாத்மாவிடம் அளித்து காமகோடி பீடத்து வழிபாட்டுத் தெய்வ மாக வழிபடச் செய்தார்.

வேதத்திற்கு விரோதமாக வழிமுறைகளை அமைத்துக் கொண்டு மக்களிடம் பரவியிருந்த 72 மதங்களைப் பின்பற்றியிருந்த வர்களை நல்லுபதேசங்களால் திருத்தி, வேத முறைப்படி வழிபடச் செய்தார். அத்வைதபாவனையும் சித்த சுத்தியும் ஏற்படும் வகையில் கணேசர், ஸுப்பிரமண்யர், சிவன், அம்பாள், விஷ்ணு, சூரியன் என்ற ஆறு ஸகுண மூர்த்திகளை வழிபட வழிகாட்டினார். ஷண்மத ஸ்தாபகாசாரியர் என்று அறிவாளிகள் புகழ்ந்தனர்.

தன் சிஷ்யர்களை நல்வழிப்படுத்திப் பரம்பொருளை உணர்ந்தவர் களாக ஜகத்குருக்களாகத் திகழச் செய்தபின், காஞ்சியில் காமாக்ஷி தேவியின் அருகில் யோகநிஷ்டையில் அமர்ந்து அகண்டஜ்யோதியில் கலந்தார். பரம்பொருளாகி அங்கே அதிஷ்டானம் பெற்றுள்ளார்.

பாமரரும் பண்டிதரும் தம் தமது இஷ்டதேவதையை வழிபடு வதற்கு உதவும்படி தனது பக்தி ததும்பிய உள்ளத்துடன் பாடிய பல ஸ்தோத்திரங்களை நமக்கு அளித்துள்ளார். விருப்பு வெறுப்புப்பிடி களில் சிக்காமல், பற்றற்று ஸ்வதர்மத்தை ஒட்டிய கருமங்களைச் சித்த சுத்திக்காகச் செய்து ஈச்வரார்பணம் செய்யும் முறையைப் போதிக்கின்ற எளிய நடையில் அமைந்த பல பிரகரண நூல்களைத் தந்துள்ளார். மிக உயர்ந்து மனநிலையில் ஆத்மஞானம் பெற விரும்புபவர்களுக்கு வழிகாட்டுகின்ற உபதேச நூல்கள் பலவற்றைத் தந்துள்ளார். ஆத்மவிசாரம் செய்து சந்தேகங்கள் ஏற்படாமல் பல கோணங்களில் நின்று வாதித்து விளக்கம் தரக்கூடிய நூல்களும் இவற்றில் அடங்கும். இன்றும் ஞான விளக்காக விளங்குகின்ற பல மடங்களில் ஞானாசார்யர்களாகத் தொடர்ந்து அருள் பாவித்து வரும் துறவறமேற்ற ஞானிகள் மூலமும் அவர் நமக்கு வழிகாட்டி வருகிறார்.

காஞ்சியில் சங்கரர் அமைத்த ஸ்ரீகாமகோடி பீடத்தில் சங்கர பக வத்பாதரிடமிருந்து தொடங்கிய குரு பரம்பரையில், 68-வது பீடாதி பதியாக நடமாடும் தெய்வமாக இந்த நூற்றாண்டைப் புனிதப்படுத் திய மகான் ஜகத்குரு பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத்

சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள். ஆதிசங்கரரே மறு அவதாரம் எடுத்துவந்தவராக, அத்புதசங்கரராக, அபூர்வ சங்கரராகப் போற்றப்பெறுபவர். 20—5—1894-ல் அவதரித்த இவர் 13—2—1907ல் காமகோடி பீடத்தின் அதிபரானுர். கடந்த 86 ஆண்டுகளில் விரிந்த அவரது ஞான ஆட்சி காலத்தில் ஆற்றியுள்ள பணிகள் வியக்கத்தக்கவை.

ஸ்ரீமடத்தின் பணிவிஸ்தரிப்பில் தொடங்கி அத்வைத வித்யை யைப் பரப்புதல், ஆஸ்திகத்தையும் தெய்வ நம்பிக்கையையும் பறப்பு தல், ஸ்ரீ ஆதிசங்கரரின் பெருமைகளை மக்களின் நினைவில் நிலைத் திருக்கச் செய்தல், ராமேச்வரம், காலடி, நாஸிக், பிரயாகை ஸ்ரீசைலம் முதலிய பல இடங்களில் சங்கர மண்டபங்கள், கோஸம் ரக்ஷணம், அநாதப்பிரேத ஸம்ஸ்காரம், பிடி அரிசி திட்டத்தின் மூலம் தேவாலயங்களும் ஏழைகளும் மேன்மை பெறுதல், வேத பாடசாலைகளின் பராமரிப்பு, வேதவித்யார்த்திகளுக்கு ஊக்கமளிப் பது, மறையவிருக்கின்ற வேத சாகைகளின் மறுமலர்ச்சி, வேத ஷடங்கம், வேதபாஷ்யம், பயிலத் தூண்டுதல், வேதமோதியவர் தன் இறுதி நாட்களைசிரமமின்றி கழிக்க மான்யங்கள், தேவாலயங் களின் பராமரிப்பு, அர்ச்சகருக்கு உதவி, முதியோரில்லம், சிறைவாசி களின் நல்வாழ்வு, நோயுற்றவருக்கு இறைவனின் பிரசாதமளித்து ஆறுதலளித்தல், கன்னிப்பெண்களின் திருமணம், வரதட்சிணையின்றி ஆடம்பரச் செலவின்றி திருமணம், வித்யாரண்யரது நூல்களைப் படிக்கவசதி, ஆகமம்சில்பம் முதலியவற்றின் வளர்ச்சி, ஜ்யோதிஷம் முதலிய சாஸ்திரங்களின் பாதுகாப்பு; உலகத்து அறிஞர்களுக்கும் விஞ்ஞானிகளுக்கும் பாரதப்பண்பாட்டின் பெருமையை அறிமுகப் படுத்துதல், வேதமோதியவருக்கு மக்களிடையே நன்மதிப்பை ஏற் படுத்துதல், தெய்வத்தின் குரலாக ஒலித்து பாரததேசத்ன் பெருமை, வேதம், ஸம்ஸ்கிருதம் பாரததேசத்தின் பண்பாடு, வர்ணாச்ரமதர் மத்தின் இன்றியமையாமை, வரம்பிற்குட்பட்டு வாழ்வதன் அவசி யம் முதலானவற்றை இன்னம் பல்லாண்டுகளுக்குப்பின் பிறப்ப வரும் உணரும்படி தெளிவு படுத்தியது. அரசியலில் புகுந்தவர் எளி தில் ஹிந்து தர்மத்திற்கு ஊறுவிளைவிக்கின்ற சூழ் நிலையை உணர்ச்சி வசப்பட்டு உண்டாகும் போது தக்கவர்களைக் கொண்டு தக்கபடி அணையிட்டு இந்து தர்மத்தின் சிறப்பைப் பாதுகாத்தது, என்று அவர்கள் செய்த பணிகளின் பட்டியல் நீண்டுகொண்டே போகும்.

அவற்றில் சிறந்தபணி தன்னுடன் இப்பணிகளில் ஆற்றலும், ஆர்வமும் மிகுந்து உதவக்கூடிய தனக்கடுத்த பீடாதிபதியை நியமித் துக் கொண்டதுதான் 1954 மார்ச்சில், தான் பிறந்த ஜய ஆண்டில், தனது அறுபதாவது வயதில் காஞ்சிபுரத்தில் ஸர்வதீர்த்தக் கரையி லுள்ள முக்திமண்டபத்தில் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யன் என்ற பூர்வாசிரமப்

பெயருள்ள பத்தொன்பது வயதுள்ள பிரும்மசாரியை, ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி என்ற தீக்ஷா நாமம் அளித்துத் தன் சிஷ்யராக்கிக் கொண்டார்கள். இவரே 69-வது பீடாதிபதியாகிருர். தன் அருட்பார்வையில் தாம் விரும்பிய எல்லா தகுதிகளையும் பெறச் செய்து அவரிடம் பீடாதிபதிப் பொறுப்பையும் அளித்தார்.

மஹா பெரியவாள் (68வது பீடாதிபதிகளை மக்கள் இப்படி குறிப்பிடுவர்.) ஸங்கல்பித்தனைத்தையும் சீரும் சிறப்பும் துலங்க நிறைவுறச் செய்த பெருமை புதுப் பெரியவாள் (69-வது பீடாதிபதிகளை மக்கள் இப்படி அழைப்பர்) யே சாரும்.

ஸ்ரீமடத்தின் பொறுப்பேற்றபின் புதுப் பெரியவர்கள் நேபாளத்திற்கு இறைமுகளும், பாரத தேசம் முழுவதும் பல தடவைகளும் யாத்திரையாகச் சென்று, தன் குருநாதர் திட்டமிட்ட பல பணிகளை நிறைவுறச் செய்த துடன், ஆதிசங்கரரின் பெருமையை மக்களின் மனத்தில் பதியச்செய்யப் பல பணிகளைச் செய்துள்ளார்கள். ஜனகல்யாண், ஜனஜாக்ரன் முதலிய பல பல புதிய திட்டங்களை அறிமுகப்படுத்திச் செயலாற்றியதால் பீடாதிபதிகளாகி நாற்பது ஆண்டு காலம் நிறைந்தும் இன்னமும் புதுப்பெரியவர்களாகவே காட்சி தருகிருர்கள். ஸ்ரீ மஹா பெரியவாளின் அனுமதியுடன் தமக்கு அடுத்து பீடாதிபதியாக ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்களை ஏற்று, அவர்களுக்கும் ஸ்ரீ மடத்தின் மிக விரிந்த பணி திட்டங்களையும் பொறுப்புகளையும் இலட்சியங்களையும் அறிமுகப்படுத்தியும், நல்ல மேதாவி களான பண்டிதர்களின் உதவி கொண்டு வேதாந்தம் நியாயம் முதலிய சாஸ்திரங்களில் சிறந்த தேர்ச்சியும் பெறச் செய்துள்ளார்கள்.

தீபத்திலிருந்து ஏற்றிய தீபமாக நல்லொளி பரப்பிக் கொண்டிருக்கின்ற மூன்று பீடாதிபதிகளையும் ஒருங்கே தரிசனம் செய்த பாக்கியம் திடீரென தடையுற்றது. 8—1—94 அன்று ஸ்ரீ மஹா பெரியவாளின் பூத உடலை நம்மிடமிருந்து மறைந்து, பெருஞ்சோதியில் அவர்கள் கலந்து பரம்பொருளாகியுள்ள அதிஷ்டானத்தை வழிபடுகின்ற பாக்கியமாக அது மாறியது. உலகமே துயருற்றது. அவர்களது பேரொளி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களிடமும் கலந்து விட்டதாகவே பொதுமக்கள் காண்கிருர்கள். தேசம் முழுவதும் ஒளிபரப்புகின்ற இவர்களது அருளாட்சியில் அகம் தெளிந்து நல்வழிப்பட்டு ஆதிசங்கரர் காட்டிய அருட்பாதையில் செல்வோமாக.

ஜனகல்யாண் அச்சகம், சின்ன காஞ்சிபுரம்.